

திருக்கயிலாய பரம்பரைத்
திருவாவடுதுறை ஆதீனம்

*21 - வது குருமகாசந்நிதானம்*

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக
பரமாசாரியசுவாமிகள்

கட்டளையிட்டருளியபடி

வெளியிடப்பெற்றது.

திருவாவடுதுறை

1963



# ஆதீனம்

தொகுத்தவர் :
ஆதீன மகாவித்துவான்
திரு. ச. தண்டபாணி தேசிகர்,
விரிவுரையாளர்,
அண்ணாமலைப்பல்கலைக்கழகம்.

# முகவுரை

சொற்களஞ்சியம்
இருந்தால் சோர்வு ஏது? சங்க
இலக்கியம் என்ற
அரண்மனை எத்தனையாயிரம்
சொற்களைக்கொண்டு
கட்டப்பெற்றுள்ளது;
அவற்றில் காணப்பெறும்
சொல்லுருவங்களும்
பொருளமைதிகளும் எவ்
வெவ்வாறு மாற்றத்தையும்
வளர்ச்சியையும்
அடைந்திருக்கின்றன என்று
உறுதியாக அறியவேண்டும்;

அதற்கான சொற்களஞ்சியம் காணவேண்டும் என்ற அவா அடியேனுக்குப் பல ஆண்டுகளுக்கு முன்பு விளைந்தது. பலகாலங்களில் வெளிவந்த இலக்கிய வரலாறுகளையும், இலக்கியக் கட்டுரைகளையும், இலக்கண ஆராய்ச்சிகளையும் படிக்கநேர்ந்தபோது அவைகளில் கண்ட கருத்துக்கள் பல ஊன்றிக் காணத்தக்கனவாக இருந்தன. ஆதலால், இத்தகையதொரு சாதனம் இல்லாமையால் இத்தகைய எழுத்துக்கள் வெளிவருகின்றன; எழுத்தாளர்கள் எத்தனை ஆயிரம் சொற்களை நினைவில்வைத்து எழுதமுடியும்? ஆகவே நல்லதொரு சாதனம் இருந்தால் ஆய்வாளர்களின் ஆழ்ந்த கருத்துப் புதையலை நன்கு பெறலாமே! என்ற ஆசை தோன்றியது; வேர்கொண்டது; தளிர்த்தது; கவடுவிட்டது.

என்னுடைய மாணவர்கள் பலரும் ஏதோ சிறிய ஊதியம் பெற்று உதவினர்; இராப்பகலாக என்னிடமிருந்து எழுதினர்; தொகுத்தனர்; அடுக்கினர்; அதனால் இக்களஞ்சியம் முற்றுப்பெற்றது.

இப்பணியை என் ஓய்வுநேர வேலையாக ஏழாண்டுகளாக இயற்றி வந்தேன். ஒருநாள் எமது பல்கலைக்கழகத் துணைவேந்தராக விளங்கிய உயர்திரு. தி. மூ. நாராயணசாமிப்பிள்ளை அவர்களும், சுநீதிகுமார சட்டர்ஜி அவர்களும் திருவெண்ணெய்நல்லூர் மெய்கண்டார் மாநாட்டிற்குப் போகும் போது என் முயற்சியின் ஒரு பகுதியைப் பார்வையிட்டார்கள். மறுநாளே துணைவேந்தர் அவர்கள், எழுதும் மாணவர் உதவிக்காக மாதம் 25 ரூபாய் விழுக்காடு ஆறு மாதங்களுக்குரிய பணமும், 2 ரீம் காகிதமும் உதவினார்கள். அப்போது உடனிருந்து இப்பணியில் பங்குகொண்டவர், அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்விரிவுரையாளர் புலவர் சோம இளவரசு அவர்கள்.

இந்தவேலை தொடங்கிய நாள்முதல் உடனிருந்து ஊதியம் கருதாது அல்லும் பகலுமாக உழைத்துவந்தவர் சின்னத்தடாகம் நாட்டாண்மைக்கழக உயர்நிலைப் பள்ளியில் இன்று தமிழாசிரியராக இருக்கும் புலவர் மு. சுப்பிரமணியன் அவர்கள். அச்சுவேலை தொடங்கியதுமுதல் உயிரெழுத்து முடியும் வரை, திருவாவடுதுறை ஆதீனம் மகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள், புலவர் மு. சுப்பிரமணியனுக்கு உணவும் மாதம் எழுபத்தைந்து ரூபாய் ஊதியமும் அளித்துவந்தார்கள். மேலும் அவ்வேலை நடைபெறவும் பொருளுதவி செய்துவருகின்றார்கள்.

மகாவித்துவான்

## முகவுரை

இ... புரணி ...வாவடுதுறை ஆதீனம் மகாசந்நிதானம் அவர்கள் அருளாலு... அ... ...மலைப் பல்கலைக்கழகத்தின் ஆதரவாலும், பேராசிரியப்

பெருந்தகை உயர்திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்களின் துணையாலும் இப்பணி நிறைவெய்தி ஒரு பகுதி வெளிவருகிறது.

தனித்தமிழ்ப் பகுதிப் பேராசிரியர், பண்டித வித்துவான், முத்தமிழ் வித்தகர், உயர்திரு லெ. ப. கரு. இராமநாதன்செட்டியார் அவர்கள் தம் பகுதி மாணவர் சிலரைத்தந்து விரைவில் முடிய ஊக்கிவந்தார்கள்.

இதனைப்பற்றி விரிவான விளக்கங்களையும், இன்றியமையாத குறிப்புக் களையும் முழுநன்றியையும் முற்றும் நிறைவெய்தியபின் தெரிவித்துக்கொள் வேன். இப்பணி பல்கலைக்கழகம்போன்ற நிலையங்கள் பல பேரறிஞர்களின் உழைப்பைப் பயன்படுத்திப் பல ஆண்டுகள் செய்யத்தக்கது என்பதை அறிஞர்கள் நன்கு அறிவார்கள். தனிமனிதன் ஒருவன் தலையாய மாணாக்கர் சிலருடைய உதவிகொண்டு செய்து

முடிக்கத் தளராத உணர்வையும் ஊக்
கத்தையும் தந்தது ஸ்ரீ ஞானமா
நடராசப் பெருமான் திருவருள்
ஒன்றே
என்பதைப் பல்லாயிரமுறை
தெரிவித்துக்கொள்கிறேன்.

1924-ம் ஆண்டு
மாணவனுகச் சேர்த்து,
ஜூலை மாதம் என்னை ஸ்ரீ மீனுட்சி தமிழ்க்காலேஜில்
மகாமகோபாத்யாய உ. வே. சாமிநாத ஐயர் அவர்
களின் அன்புக்குரிய மாணவனுகச் செய்தளித்து, ஸ்ரீ மீனுட்சி தமிழ்க்கல்லூரி
யில் தமிழ் விரிவுரையாளராகவும் நியமித்த திரு. அண்ணுமலை அரசர் அவர்க

ளுடைய பெரிய உள்ளமே இக்களஞ்சியம் கட்ட உதவி செய்தது. தமிழ்த்
தாத்தாவும் அடியேனுடைய ஞானத்தந்தையுமாகிய மகாமகோபாத்யாய
ஐயர் அவர்கள்
இக்களஞ்சியம்

அவ்வப்போது இத்துறையிற் பயிற்றிவந்த
சேர்க்க உபாயமாக அமைந்தது.

பழக்கங்களே

கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டு முதல் இன்றுவரையில் — என்றும் செந்தமிழைச் சொல்லாலும் பொருளாலும், ஆடையாலும் அணிகளாலும் வளர்த்துவருகின்ற திருவாவடுதுறை ஆதீனமே இக்களஞ்சியம் எழும்புவதற்குச் சாரமாக இருந்து மேன்மேலும் எழுப்புகிறது. ஆதீனத்து ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் இக்களஞ்சியத்தின் பாதுகாவலராயிருந்து, அறிஞர் அனைவருக்கும் பயன்படச் செய்கின்றனர்கள்.

இங்ஙனம் உருவாகிப் பயன்தந்து திருவளிக்கும் சொற்களஞ்சியம் ஏனைய பகுதியும் விரைவில் வெளிவந்து தமிழுலகிற்குப் பயன்தருமென்று தெரிவித்துக்கொள்கிறேன்.

பெரிய முயற்சியில் சிறிய பிழைகள் பல இருக்கத்தான் செய்யும். இதனைக் காணும் அறிஞர் பெருமக்கள் பிழைகளையும் இதற்கு உதவியான பல கருத்துக்களையும் தெரிவிப்பார்களாயின் பின் தொடர்ந்து நடைபெறும் பணிக்குப் பெரிதும் உதவியாயிருக்கும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

இங்ஙனம்,

திருவாவடுதுறை

ஆதீன மகாவித்துவான்,

24—12—63

ச. தண்டபாணி தேசிகர்.



ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள்

உ

# மதிப்புரை

சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்ட தமிழ் அகராதி மிகச் சிறந்த தமிழ்த்தொண்டு ஆகும். ஆனால் அதனைப் பதிப்பிக்கத் தொடங்கியபோது, சங்க நூல்கள் அத்தனையும் வெளியாகவில்லை; வெளியான நூல்களின் பொருள்களும் முழுவதும் விளங்கவில்லை. எனவே சங்க நூல்களைத் தெளிவாக அறிவதற்கு அந்தத் தலைசிறந்த அகராதி உதவுவது அருமையாகி விட்டது.

அதனோடு அந்த அகராதி அடிப்படைச் சொற்களை மட்டுமே தருகிறது. ஒவ்வொருசொல்லும் பலபல வடிவங்களில் தங்க நூல்களில் வரக் காண்கின்றோம். அவற்றையெல்லாம் தொகுத்துத் தருகின்ற அகராதி இலக் கண ஆராய்ச்சிக்கும், தமிழ்மொழி வரலாற்றின் ஆராய்ச்சிக்கும் பெரிதும் உதவும்.

இத்தகைய அகராதியைப் பல நிலையங்கள் தொகுத்து வருகின்றன. அவ்வாறு தொகுத்துவரும் தொண்டே அத்தகைய புதுவகை அகராதியின் இன்றியமையாமையை விளக்கும்.

சென்னைத் துரைத்தனத்தைச் சேர்ந்த தமிழ்வளர்ச்சி ஆராய்ச்சிக்கழகமும், இந்த இன்றியமையாமையை உணர்ந்து வரலாற்றுக்கொள்கைப்படி ஒரு புதிய தமிழ் அகராதியை அமைக்கவேண்டும் என்ற திட்டத்தை ஒப்புக்கொண்டுள்ளது. சீன நெருக்கடியின் காரணமாக இப்போது அது உருவாவதற்கில்லை.

அ ண்ணும லைப் பல்கலைக்கழகம் இத்தகைய தொண்டில் அண்மையில் ஈடுபட்டு வருகிறது. தமிழில் சிறந்த இலக்கிய நூல்களிலும், கல்வெட்டுக்

களிலும் வரும் எல்லாச் சொல் வடிவங்களையும் அகராதி வகையில் முறைப் படுத்திப் பொருள் எழுதி அது ஆராய்ந்து வருகிறது. இத்தகைய ஆழ்ந்த நிலை ஆராய்ச்சி, தமிழ் மொழியின் வரலாற்றினை எழுதுவதற்குப் பெரிதும் உதவுவதை அது கண்டு வருகிறது.

நமது பல்கலைக்கழக விரிவுரையாளரும், ஆதீன மகாவித்துவானுமான ச. தண்டபாணிதேசிகர் அவர்கள் ஏழாண்டுகளாகச் சங்க இலக்கியங் களில் வருகின்ற சொல்வடிவங்களையும், அவைகட்குப் பழைய உரையாசிரியர் கொண் ட

உரைமாற்றங்களையும், தேவையான இடங்களுக்கு இலக்கணாக் குறிப்புக்களையும், பாடல் எண்ணும், வரி எண்ணும் சுட்டித் தொகுத்து வந்தார்கள்.

பல நூல்களை அச்சிட்டு இலவசமாக வழங்கியும், அறிஞர்களை ஊக்கிப் புதியதுறையில் பல ஆய்வு நூல்களும் கருத்து நூல்களும் தத்துவ நூல்களும் வெளிவர உபகரித்தும் வருகின்ற திருவாவடுதுறை ஆதீனம் 21-வது குருமகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் இதனை

வெளியிடப் பெருங்கருணையுடன் ஏற்றுக்கொண்டார்கள். தொடர்ந்து மேலும் இதனைச் செவ்வையாக அச்சிட்டு வருகிறார்கள்.

இந்தத் தொண்டு தொடங்கப்பெற்றுப் பல நாட்களாகியும் இதை அச்சிடுகின்றதில் ஏற்படும் பல சிக்கல்கள் காரணமாக இன்றுதான் 'உயிர்



எழுத்துக்களின்' வரிசையை முடித்து, இந்த அகராதியின் முதற்பாகத்தை ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் உலகிற்குத் தம் திருவருள் அடையாளமாகத் தந்து உதவுகின்றார்கள். எஞ்சிய பகுதிகளையும் விரைவில் வெளியிட வேண்டுமென்ற திருவுள்ளத்தையும் தெரிவித்துள்ளார்கள். அவர்களைத் தமிழுலகம் என்றும் நன்றியுடன் போற்றக் கடமைப்பட்டுள்ளது.

இந்த அகராதிக்குச் 'சங்க இலக்கியச் சொற்களஞ்சியம்' என்ற பெயர் மிகப் பொருத்தமாகும். இந்தக் களஞ்சியத்தில் சொற்களை அல்லாமல் சொல்லுறுப்புகளும் அகராதிவரிசையில் அமைந்துள்ளன. சொல் ஆராய்ச்சிக்கும், தமிழ்மொழி ஆராய்ச்சிக்கும், தமிழ்ச்சொற்களின் பொருள்மாற்றத்தின் ஆராய்ச்சிக்கும் இந்த அகராதி பெரிதும் பயன்படும் என்பதில் ஐயமில்லை. ஒவ்வொரு அடிச்சொல்லின் மாற்றுவடிவங்களையும், சந்தி விகாரவடிவங்களையும் இங்கே குறிப்பிட்டுள்ளமையும் கூறுதல்வேண்டும். இது சிறந்த அகராதியின் முடிவான வடிவமென்று நாங்கள் எண்ணிவிடவில்லை. இந்தச் சொற்களஞ்சியம் வெளிவருவதால் மேலும் பலர் இந்தத் துறையில் செய்யும் தொண்டு திருத்தமுறலாம் என்ற எண்ணத்தாலேயே இதனை வெளியிட வேண்டும் என்று நான் வற்புறுத்தி வந்தேன். இதனைத் தமிழ் உலகம் வரவேற்று ஊக்கினால், இந்தத் தொண்டு மேலும் தொடர்ந்து பல வகையில் விரிந்து நடைபெற்று, தமிழுலகிற்கு ஏற்ற தொண்டாக மலர்ந்து கனிந்து பயன்தரும் என்று நம்புகிறேன்.

இந்தத் தொண்டினைச் செய்வதற்கு ஊக்கம் அளித்த அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கும், சிறப்பாக இதைத்தொடங்கியபோது உதவிய துணைவேந்தர் திருவாளர் டி. எம். நாராயணசாமிப் பிள்ளை அவர்களுக்கும் நன்றி.

இதனை வெளியிட முன்வந்து, இச் சொற்களஞ்சியத்தைத் திருவாவடுதுறை ஆதீனத்தின் அருட்செல்வமாகத் தமிழ் உலகிற்கு உதவத் திருவருள் பாலித்த குருமகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களுக்கு நாம் என்றென்றும் நன்றியுடையோம். அன்று ஐயரவர்களைக்கொண்டு சங்க இலக்கியங்களை வெளிவரச்செய்த இந்த ஆதீனமே இன்றும் சொற்களஞ்சியத்தையும் தருகிறது. நிறைந்த உள்ளத்தோடு இப்பணியை இயற்றிவருவது அனைவரும் போற்றற்குரியதாம்.

இந்தத் தொண்டினை அயர்வு என்பது இல்லாமலேயே தொடர்ந்து செய்துவரும் திருவாவடுதுறை

ஆதீன மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர் அவர்களுக்கும் என்னுடைய மனங்கலந்த நன்றி உரியது.

இவ்வாறு ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களை வணங்குதற்கும், ஏனையோரை வாழ்த்துதற்கும் அமைகின்றேன். வாய்ப்பளித்த திருவருளை நான் இறைஞ்சி

இங்ஙனம்,

அண்ணாமலைநகர்
1—8—1963

தெ. பொ. மீனாட்சிசுந்தரன்,
மொழியாராய்ச்சிப்பகுதிப் பேராசிரியர்.



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ

இருபத்தொன்றாவது குருமகாசந்நிதானம்
சுப்பிரமணியதேசிக பரமாசாரிய

சுவாமிகள்

சிவமயம்

சங்க இலக்கியச் சொற்களஞ்சியம்.

# அ

அ - அழகு. (உரி). பொரு. 6;நெடு. 41; குறி. 140; மலை. 32; கலி. 12, 64, 81, 113; குறு. 159, 119; அக. 6, 16, 21, 26, 60, 70, 79, 82, 86, 117, 125, 126, 183, 216, 220, 229, 250, 251, 281, 290, 307, 326, 327, 342, 343; ஐங். 185, 194, 306, 316, 481; புற. 25, 36, 198, 257, 344, 383; நற். 21, 25, 32, 134, 160, 173, 179, 201, 215, 230, 269, 282, 303, 312, 358, 370, 379, 398; பதி. 31:26, 68:18, 78:2;
இசைநிறை இடைச்சொல். பரி. 4:61 - 64, 13:41, 47;
வேற்றுமை உருபு (இடை). முல்லை. 31; புற. 5, 44, 55, 58, 116, 148;
சுட்டு (இடை). திரு. 103, 118; குறி. 55, 214; கலி. 2, 11, 34, 35, 38, 57, 64, 67, 70, 75, 77, 78, 96 - 98, 102, 103, 145, 146; அக. கட. 23, 30, 48, 216, 266, 272, 310, 314, 327, 339, 342, 343, 387; ஐங். 244, 301; குறு. 297; புற. 1, 6, 20, 30, 112, 126, 150, 194, 198, 206, 229, 258; நற். 87, 95, 102, 126, 176, 259, 355; பதி. 19:10, 78:12; பரி. 3:29, 7:66, 9:36, 10:94, 11:63, 112, 19:62, 63, 103.

அஃகிய - சுருங்கின. (பெ.எ). மலை. 551.

அஃகியோன். (வி. அ. பெ). குறு. 346.

அஃடு - அடிப்பகுதி. (பெ). (அகடு என்பதன் திரிபு) புற. 319.

அஃதான்று - அதுவன்றி.(கு.வி.எ). அக. 98; புற. 156.

அஃது. (சு.பெ). கலி. 22, 62, 75, 107, 108, 134, 149; குறு. 18, 80, 93, 97, 170; 175, 237, 259, 290; அக. 16, 38, 46, 52, 56, 68, 172, 195, 258, 266, 316, 335, 372; ஐங். 46, 204, 280; புற. 48, 97, 145, 360; நற். 53, 62, 128, 134, 150, 174, 206, 311; பரி 7:81, 19:9;
எழுவாயின் முற்றுச்சொல். ஐங். 104.

அஃதே. அக. கட.

அஃதை - ஒரு குறுநில மன்னன். (பெ). அக. 76, 96, 113.

அக்கரை. பதி. பதிக. 5:12.

அக்கவின். கலி. 38.

அக்கள்வன். கலி. 57.

அக்காடு. கலி. 11.

அக்காதலன். கலி. 145.

அக்கால் - அப்போது. குறு. 277; அவ்விடத்து. கலி. 146.

அக்கு - (சாரியை). கலி. 65.

அக்குரன் - தலையெழுவள்ளல்களில் ஒருவன். (பெ). பதி. 14:7.

அக்குளுத்து - அக்குளுக்காட்டுதலையுடைத்து. (கிச்சுகிச்சு மூட்டுதல்) கலி. 94.

அக்குன்று - அக. 48.

அக இறை - வீட்டின் இறப்பு. (பெ). நற். 71.

அகடார ... முயங்குவேம் - இறுக முயங்குவேம். கலி. 94.

அகடு - நடு இடம். (பெ). பரி. 10:74; பொல்லம் பொத்துதல். மலை. 33; வயிறு. ஐங். 81; புற. 387; நற். 103, 370.

அகடுநனை ... வீ - தேறல் உள்ளிடம் நனைந்த பூ. புற. 390.

அகத்தடக்கிய - உட்கொண்ட. புற. 6; நற்.கட.

அகத்தது - (வி.அ.பெ). நற். 276.

அகத்தர். கலி. 25.

அகத்தவாக். கலி. 25.
அகத்து - உள்ளே. பெரு. 108; கலி. 142, 147; அக. 66, 156; நற். 201; பரி. 8:41, 90, 20:67.
அகத்தோர். புற. 28.
அகந்தொறும். நற். 249.
அகந்தோறு. அக. 9.
அகநாடு-உள்ளாகியநாடு. மது. 149; புற. 28.
அகப்பட்ட. (பெ. எ). மலை. 238, 499; புற. 17, 73.
அகப்பட்டது. (வி. மு). கலி. 147.
அகப்பட்டமை. (பண். பெ). அக. 256.
அகப்பட்டான் - அகப்பட்டவன். (வி. அ. பெ). கலி. 104.
அகப்பட்டு - உட்பட்டு. (வி. எ). கலி. 139.
அகப்பட - உட்பட. (செய. வி. எ). அக. 44. சேர. அக. 73, 352.
அகப்படின் - அகப்பட்டால். (செயின். வி. எ). கலி. 91.

அகப்படுத்த -அகப்படுத்திய. அக 227, 351, 373; பதி. 22: 15;
பற்றிக்கொண்ட. நற். 261.

அகப்படுத்து - பற்றிக் கொண்டு. (செய்து. வி. எ). அக. 36; பதி. 32: 14, 50: 14.

அகப்படுப்ப - அகப்படுத்திக்கொள்ள. (செய. வி. எ). கலி. 23.

அகப்படுப்பேன் - அகப்படுத்திக்கொள்ளுகிற யான். (வி.அ.பெ). கலி. 142.

அகப்படுவது - அகப்படுதல். புற. 58.

அகப்படேஎன்-கைக்கொண்டிலேன். புற. 72.

அகப்பா - மதில்; அகப்பா என்னும் ஓர் அரண். (பெ). நற். 14; பதி. 22:26, பதிக. 3: 3.

அகம் - இடம். (பெ). திரு. 40, முல்லை. 44; மது. 290, 299, 308; குறி. 61, 261; பட்டி. 227; மலை. 258, 344, 366; கலி. 103, 144, 147; குறு. 319; அக. 19, 21, 62, 63, 66, 80, 89, 107, 114, 155, 172, 192, 202, 214, 218, 232, 241, 266, 271, 321, 331, 367, 386, 389; ஐங். 30, 253, 401, 500; புற. 37, 43, 103, 190, 198, 200, 209, 243, 362, 363; நற். 14, 16, 31, 36, 51, 58, 202, 371; பதி. பதிக. 9:5;
இடையில். (பெ). சிறு. 26;
உலகம். (பெ). மலை. 81;
உள். (பெ). புற. 5; நற். 163;
உள்ளம். மலை. 184; குறு. 137; நற். 166; புற. 337, 394;

உள்ளிடம். பெரு. 108; மது. 149; குறி. 220. கலி. 105; அக. 8, 294; பதி. 81:21; பரி. திர. 7:3;
ஏழனுருபு. (இடை). கலி. 23, 38, 40, 57, 88, 92, 120; அக. 258; குறு. 42; புற. 3. 52, 62, 91, 99, 117, 143, 360, 382, நற். 58, 95, 122, 134, 228, 294, 318; 334, 344, 348; பதி. 14:19, 24:23, 74:7; பரி. 2:69, 7:46, 11:61;
கோட்டம்: (பெ). பொரு. 240;
பின்னல். (பெ). அக. 353;
மார்பு. (பெ). அக. 100, 173; கலி. 31; புற. 144; நற். 297, 398.

அகம்கனலி - உள்ளே கொதித்து. நற். 163.

அகம்சேர - ஆகத்தைச்சேரும்படி. கலி. 31.

அகமடல் - உள்மடல் . அக. 260; நற். 203; மடலகத்தே. அக. 40.

அகமடிவையர் - அகவிதழால் ஆகிய தழை ஆடையையுடையவர். பதி. 27:3.

அகமனை - உள்பலகை. ஐங். 168.

அகமலி உவகையள். அக. 86.

அக...முலை. குறு. 348.

அகரு - அகில்மரம். (பெ). பரி. 12: 5.

அகல் - சட்டி. (பெ). பெரு. 377;
தகளி. நெடு. 102; அக. 19, 235; புற. 269, 300.

அகல் (ன்) அகலம் - அகன்றமார்பு. கலி. 39.

அகல் அங்காடி - அகன்றகடை. (வி. தொ). நற். 258.

அகல்(ன்) அட்டில் - (வி.தொ) பட்டி. 43.

அகல் அடை - அகன்ற இலை. (வி. தொ). கலி. 70; அக. 96; புற. 209, 266.

அகல் அமை - அகன்ற மூங்கில். (வி. தொ). அக. 253.

அகல் அல்குல். (வி. தொ). கலி. 67, 92, 108, 109; குறு. 294; அக. 275, 390; ஐங். 316; புற. 271, 389; நற். 200, 390.

அகல் அல்குலாள். (வி. தொ). கலி. 52.

அகல் அறை - அகன்ற பாறை. (வி. தொ). குறி. 98; மலை. 133; அக. 105, 143, 309; பாசறை; மலைப்பக்கமும் ஆம். பட்டி. 237; மலைப்பக்கம். கலி. 45, 49, 113.

அகல் ஆங்கண். (வி. தொ). மது. 164, 327; கலி. 108, 143.

அகல் ஆம்பி - அகன்ற பன்றிப் பத்தல். (வி. தொ). மது. 91.

அகல் இருவானம் - விரிந்த பெரிய வானம்.



(வி. தொ). பெரு. 292; மது. 267. குறி. 48; அக. 71.

அகல் இருவிசும்பகம். அக. 214.

அகல் (ன்) இருவிசும்பு. (வி. தொ). கலி. 102.

அகல் இரு விசும்பு. பெரு. 1; நெடு. 20; மலை. 100; குறு. 44; அக. 79, 101, 383; புற. 8, 228; நற். 377; பதி. 52: 28, 68: 4, 81: 3.

அகல்(ன்) எறுழ்த்தோள் - இடமகன்ற வலிய தோள். பெரு. 74.

அகல்(ன்)கட் கேணி - அகன்ற வாயையுடைய கேணி. (வி.தொ). நற். 92.

அகல்(ன்)கண் - அகன்ற இடம். (வி. தொ). கலி. 115; புற. 159.

அகல்(ன்)கண் அருவி. (வி.தொ). ஐங். 220.

அகல்(ன்)கண் செறு - இடமகன்றவயல். (வி. தொ). பதி. 71:1.

அகல்(ன்) கண் ஞாட்பு - அகன்ற போர்க் களம். (வி. தொ). பதி. 45:5.

அகல்(ன்) கண்தடாரி. (வி. தொ). புற. 370, 371, 385.

அகல்(ன்) கண் பாசறை - அகன்ற இடத்தினை உடைய பசிய கற்பாறை. (வி. தொ). நற். 125.

அகல்(ன்) கண்பாறை. (வி. தொ). மலை. 276; அக. 393.

அகல்(ன்) கண் வைப்பு.(வி.தொ). பதி.29:10, 58:19, 66:20, 76:15.

அகல்(ன்) கரை. (வி. தொ). அக. 280.

அகல்(ன்)கிடக்கை - அகன்ற இடம். (வி. தொ). பொரு. 179; அகன்ற உலகம். புற. 19, 369.

அகல் (ன்) குறி. (வி. தொ). கலி. கட.

அகல்(ன்)...குறை - அகன்றதசை. புற. 364.

அகல் (ன்) சிலம்பு. மலை. 14.

அகல் (ன்) செறு - அகன்ற வயல். அக. 13.

அகல் (ன்) சேணத்தம் - அகன்ற நெடிய சுர நெறி. அக.3.

அகல்(ன்)ஞாலம் - கலி. 29, 119, 146, 148; புற. 35, 395.

அகல்(ன்றி)திட்டை-அகன்றமேடு. (வி.தொ). பட்டி. 60.

அகல்(ன்று)துறை-அகன்றநீருண்ணும்துறை. கலி. 73; அக. 25, 36, 59, 116, 181, 255, 256; குறு. 311; புற. 374.

அகல் (ன்றா) தாமணி. குறு. 379.

அகல்(ன்றே)தோன்றி - பரந்த காந்தள். பொரு. 199.

அகல் (ன) நகர் - அகன்ற மனை. பட்டி. 20; கலி. 19, 83, 84; அக. 311; புற. 387.

அகல் ... நடுநாள். அகன்ற இரவு. அக. 141.

அகல் (ரு) நாடன் - அகன்ற நாட்டினையுடை யவன். கலி. 39.

அகல்(ரு)நாடு. கலி. 26; புற. 249.

அகல் (ளி) நிலா - விரிந்த நிலா. (வி. தொ). நற். 377.

அகல்(னெ)நெடுந்தெரு - மது. 359; நெடு30; நற். 200, 319.

அகல் (ன்) பந்தர். அகன்ற பந்தல். அக. 98.

அகல் (ன்) பரப்பில். அக. 176.

அகல் (ன்) பரப்பு. அக. 327.

அகல் (ன்) பறந்தலை - அகன்ற போர்க்களம். புற. 35, 64; பதி. 22:31.

அகல் (ன்) பாசறை. புற. 373.

அகல் (ன்)பாழ் - அகன்றபாழிடம். பதி. 25:9.

அகல்பு - அகலுதல். (தொ. பெ). பதி. 43:33.

அகல் (ன்) புறம் - அகன்ற மேலிடம். நற்.312.

அகல் (ன்) புறவு - அகன்ற முல்லை நிலம். முல்லை. 24.

அகல் (ன்) பெருங்குன்றம். அக. 45.

அகல் (ன்) பெருஞ்சிறப்பு. ஐங். 403.

அகல் (ன்) பை - அகன்ற பாம்பின் படம். மலை. 259; நற். 75.

அகல் (ன்) பெய் குன்றியின் - அகலிளிடத்துப் பெய்த குன்றிமணி போல. புற. 300.

அகல் (ன்) பொய்கை. மது. 171; பட்டி. 242.

அகல்(ன்)பொழில்-அகலியபொழில்.(வி.தொ). புற. 256.

அகல்(ன்ற)தடாரி. பொரு. 70.
அகல் தப்பல் - அகன்றுவந்தபிழை. அக. 109.
அகல் (ன்ற) தலை. பொரு. 1.
அகல் (ன்ற) தலைநாடு. பதி. 23:25, 25:13, 28:14, 62:19.
அகல் (ன்ற) தாழி. புற. 228.
அகல்(ன்ற)தாளை - அகன்றசேனை. (வி. தொ). புற. 351.
... மண்டை - அகன்ற மண்டை என்னும் கலம். புற. 235.
அகல்(ன்)...மண்டையர். அக. 86.
அகல் (ன்) மதி - நிறைந்த மதி. கலி. 56.
அகல் (ன்) மலை. மலை. 205; கலி. 45; அக. 18, 171.
அகல் (ன்) மார்பு - அகன்ற மார்பு. (வி. தொ). புற. 255; பரி. 15:9.
அகல் (ன்)...மார்பு. கலி. 79.



அகல் யாறு. கலி. 34; அக. 246.
அகல் வட்டியர் - அகன்ற மலர் பெய்யும் செப்பினையுடையோர். அக. 391.
அகல் (ன்) வட்டில். ஐங். 47.
அகல் வயல் - அகன்ற வயல். (வி. தொ). திரு 72; நெடு. 21; கலி. 79; அக. 217, 235, 246, 294; புற. 17, 142; நற். 8, 210, 365.
அகல்வர் - நீங்குவார். (வி. மு). நற். 24.
அகல் வரி - அகன்ற கோலம். நற். 283.
அகல்வாம். நற். 103.
அகல் வாய் - அகன்ற இடம். குறு. 92, 233.

அகல்வாய்க் கூவல். அக. 295.
அகல்வாய்ச்...சுனை. குறு. 59; நற். 5, 357.
அகல்வாய்ப் பாந்தள் - அகன்ற வாயினை உடையபாம்பு. அக. 68.
அகல்வாய் மண்டிலம் - அகன்ற வாயினை யுடையசந்திரமண்டிலம். அக. 122.
அகல்வாய் வானம் - அகன்ற இடமாகிய வானம். அக. 229, 365; குறு. 92.
அகல் வானம். மது. 50.
அகல் விசும்பு. மது. 182; புற.77; நற். 316.
அகல் (ன்) விசும்பு. அக. 108.
அகல்வு. (தொ. பெ). ஐங். 212; நற். 388.
அகல் (ன்) வைப்பு. புற. 18; நற். 377; பதி. 15:8, பதிக. 3:5.
அகல் வையத்து. பதி. 90:9.
அகல - சிதைய. (செய.வி.எ). நற். 89;
தீரும்படியாக. நற். 156;
நில்லாமல். பொரு. 93;
நீங்க. மலை. 167, 412; கலி. 70, 114, 148; அக. 102, 187, 234, 255, 278, 285, 305, 328, 360, 400; புற. 25; நற். 18, 217; பதி. 19:16, 31:11, 59:4, 69:15;
பிரிய. குறு. 24, 345; கலி. 146.

அகலத்தவன்-மார்பினையுடையவன். பரி. 9:58.
அகலத்தன். பதி. கட: 2.
அகலத்து - மார்பிடத்தே. பதி. 16:17; பரி. 8:43, 11:63.
அகல நீக்கி - ஒருசேர நீக்கி. நற். 361.
அகலம் - பரப்பு. கலி. 79; புற. 20;
பெருமை. பரி. 4:3;
மார்பு. (பெ). திரு. 272; மது. 493; குறி. 121; கலி. 28, 39, 92 - 94, 135; குறு. 150; அக. 26, 36, 56, 175, 224, 354; ஐங். 33, 352, 353, 465; புற. 2, 29, 61, 78, 155, 282, 308; நற். 235; பதி. 14:11, 31:7, 40:13, 63:4; பரி. 2:31, 11:63, 12:72, 13: 12, 16:44, 20:92.
அகலமும். குறு. 362; அக. 388.
அகலமை அல்குல். அக. 385.
அகலல்கும். பரி. திர. 2:33.
அகலலும் நீடின்று - அகற்சிதான் நீட்டித்த வில்லை. கலி. 114.
அகலவிட்டு - கலந்து விதைத்து. நற். 209.
அகலள்ளல் - அகன்ற சேறு. புற. 395.
அகலா - அகலாத (ஈ.கெ.எ.பெ.எ). பரி. 8:43; பிரிந்து சென்று. (செய்யா.வி.எ). நற். 242.

அகலா அந்துளை - குறுகிய அழகிய துளை. அக. 225.
அகலாக் காதல். பட்டி. 103.
அகலாச் செல்வம். புற. 34.
அகலாதாகி. குறு. 257; அக. 305.
அகலாது - செல்லமாட்டாமல். (வி.எ). குறு. 181; ஐங். 499;
நீங்காமல். நற். 89.
அகலா...மீனின். திரு. 88.
அகலான் - பிரியான். (வி.மு). கலி. 146; அக. 50; பிரியானாகி. (மு. எ). நற். 285.
அகலிகை. (பெ). பரி. 19:50.
அகலிடம். அக. 269, 295, 299.
அகலிதாக - இடமுடைத்தாக. புற. 256.
அகலியாறு - அகன்ற ஆறு. அக. 97.
அகலிருங்கானம். அக. 338; நற். 17.
அகலிலை. அக. 64, 107, 119, 143, 178, 186, 196, 315, 336, 370, 380; நற். 89, 185, 309.
அகலிலைப்பலவு. குறு. 352.
அகலினும். குறு. 257; அக. 119.
அகலும். புற. 50.
அகலுளாங்கண் - அகன்ற இடத்தையுடையவூர்.

குறி. 4; மலை. 438; அக. 226, 281; புற. 65, 362; நற். 266.

அகலெழில். அக. 307.

அகலேன். அக. 49.

அகவ - அழைக்க. (செய. வி. எ). மது. 675; குறி. 220; குறு. 191; பரி. 6:4, 10: 16, 15:40. ஐங். 118, 314, 341;
இசையுண்டாக்க. பட்டி. 136;
ஒலியாநிற்க. திரு. 122;
கூப்பிட. மது. 166.

அகவயல். பரி. 7:27.

அகவயின். நற். 372.

அகவர்-சூதர்: குலத்தார் எல்லாரையும் அழைத்துப் புகழ்வர் என்பது பற்றி அகவர் என்ருர்.
அகவல்

(ஆ. பெ). மது. 223;
நாட்டில் வாழ்வார். பொரு. 220.

அகவல் - அழைத்தல். (தொ. பெ). குறி. 23.
அகவலன்-பாடும்பாணன்(ஆ.பெ)பதி. 43:28.
அகவன்மகளிர் - தெய்வங்களை அழைத்துப் பாடும் கட்டுவிச்சி. குறு. 298.
அகவன்மகளே! - குறு. 23.
அகவா - அழைத்தன இல்லை. (எ. வி. மு). கலி. 131.
அகவிதழ் - உள்ளிதழ். கலி. 77.
அகவினம் - அழைத்தேமாய். (மு. எ). கலி. 40.
அகவு - ஓசை. (பெ). நற். 115
அகவுநர் - அடித்து ஓலிசெய்பவர். (பெ). அக. 152;
கூத்தர். அக. 113;
பாடுநர். அக. 208, 249; பரி. 15:42;
பாணர். அக. 97.
அகவும் - அழைக்கும். கலி. 92; குறு. 151,249;
ஆரவாரிக்கும். மது. 333; நெடு. 89;
கூவும். குறு. 264, 301; அக. 85, 97, 120, 272, 334; ஐங்; 60, 64.
அகவுவம் - பாடுவம். (த.ப.வி.மு). கலி. 42.
அகழ் - அகழி; கிடங்கு. (பெ). மலை. 214; புற. 379; பதி. 33:9;

குளம். பெரு. 108.
அகழ்க்குவன் - அகழ்தலைச்செய்வான். (வி.மு). பட்டி. 271.
அகழ் கிடங்கு. (வி. தொ). மலை. 91.
அகழ் குழி . (வி. தொ). ஐங். 208.
அகழ் கேழல். (வி. தொ). ஐங். 270.
அகழ்ந்த - கல்லப்பட்ட. (பெ. எ). மது. 294; தோண்டிய. குறு. 379.
அகழ்ந்தகுழி. அக. 21.
அகழ்ந்து - பறித்து. (செய்து. வி. எ). நற். 59.
அகழ்புழுதி. (வி. தொ). பரி. 13:32.
அகழ்வோன் - அகழ்ந்தெடுப்பவன். (வி. அ. பெ). அக. 282.
அகழி - கிடங்கு. (பெ). மது. 86; புற. 14, 18, 21, 37; பதி. 53:8.
அகழிய...ஞாயில் - அகழியையுடைய கோட்டை யின் ஏவறை. பதி. 71:12.
அகழிய மதில். பதி. 45:7.
அகழும் - பறிக்கும். (பெ. எ). நற். 125, 336.
அகளம் - நீர்ச்சால். (பெ). மலை. 104; யாழின் உறுப்பு. சிறு. 224.
அகற்ற - அகலச்செய்ய. (செய.வி.எ). புற. 26, 376, 377, 390.

அகற்றல். (தொ. பெ). கலி. 142.
அகற்றல் யாவது. புற. 381.
அகற்றி - கைவிட்டுப்போகப்பண்ணி. (செய்து. வி. எ). சிறு. 246;
பெருக்கி. மது. 766;
போக்கி. புற. 387;
விலக்கி. அக. 399.
அகற்றிய. (பெ. எ). அக. 65, 272; நற். 391; பரி. 8:4.
அகற்றும். (பெ. எ). அக. 47, 71; புற. 56, 397; பதி. 22; 33; பரி. 13:31.
அகறல் - பிரிதல். (தொ. பெ). கலி. 2; குறு. 79; அக. 213, 319, 398; நற். 137, 243; பரி. 9:23.
அகறலோ கொடிது - நீங்குதல் கொடிது. கலி. 29.

அகறியாமின் - செல்லுவையாயின். நற். 205.
அகறிர் - செல்வீர். (மு. வி. மு). நற். 37.
அகறிராயின் - செல்லுவீராயின். நற். 266.
அகறிரோ - போகின்றீரோ. பொரு. 123.
அகன்உறத்தழீஇ. குறு. 29.
அகன்சுடர் - பெரிய ஞாயிறு. அக. 47.
அகன்நக - உள்ளம் மகிழ. புற. 207.
அகன்மின் - போவீர். (மு. வி. மு). மலை. 270.
அகன்மோ - அகலுக. (மு. வி. மு). அக. 306.
அகன்ற - சென்ற. (பெ. எ). மலை. 397, 551; அக. 21,29, 78, 86; ஐங். 134, 176; புற. 3, 257; நற். 214, 333;
பரந்த. நற். 245.
அகன்ற அல்குல். கலி. 14; நற். 101, 232.
அகன்ற கண்ணாள். பரி. 11 :46.
அகன்ற கேள்வி - அகன்ற ஆகமம். பரி. 3:48.
அகன்ற ஞான்று - பிரிந்த அந்தநாள். குறு. 41.
அகன்ற நாடு. கலி. 26.
அகன்றலை - அகன்ற இடம். குறு. 124; அக. 36; புற. 7, 34, 63. 89, 98, 371; நற். 293.
அகன்றவர். கலி. 16, 120, 150.
அகன்றனர். (வி. மு). அக. 69, 91, 209, 227, 313; நற். 246.

அகன்ருரை-நீங்கிஞரை. (வி.அ.பெ).கலி.129.
அகன்றிசினேர்-கைவிடப்பட்டோர். குறு.127; அக. 311.
அகன்று-நீங்கி. (செய்து. வி. எ). பொரு. 198; கலி. 16, 17, 28, 53, 65, 78; குறு. 64, அக. 81; பரி. 3:34.
அகன்று உறைமகளிர் - பிரிந்துதங்கியமகளிர். அக. 217.

## அகன்று மடிகலிங்கம்

6

## அங்கை

அகன்று மடிகலிங்கம் - அகல மடிக்கப்பட்ட ஆடை. புற. 393.
அகன்றுவரு கூட்டம்-சேர்ந்து வரும் கூட்டம். (வி. தொ). பதி. 72:12.
அகன்றுறை. ஐங். 143, 361.
அகன்றுறை ஊரன். நற். 40.
அகன்றென - அகன்ருராக. (செய. வி. எ). நற். 109.
அகன்றெடி - அகன்றதொடி. நற். 77.
அகன்றேர் - பிரிந்துபோனவர். குறு. 190.

200; அக. 177,227; ஐங். 456; நற். 69,118.

அகில். (பெ). திரு. 296; பொரு. 238; சிறு. 116,263; நெடு. 56; குறி. 110; பட்டி. 188; கலி. 39; குறு. 286, 339; ஐங். பின். 2; புற. 337; பரி. 10:76, 82, 18:53.

அகில்கெழுசாந்தம். பரி. 12:13.

அகில்கெழு ... புகை. பரி. 17: 30.

அகில்சுடு கானவன். நற். 282.

அகுதை - மதுரையிலிருந்த ஓர் வள்ளல். அஃதை எனவும் வழங்கும். (பெ). அக. 208; குறு. 298; புற. 233, 347.

அகைகாஞ்சி - தளிர்க்கின்றகாஞ்சி.(வி. தொ). கலி. 74.

அகை ... குழை - தழைத்த தளிர். (வி. தொ). அக. 283.

அகைத்த - கிளைத்தெழுந்த.(பெ. எ). புற. 139; முறித்த. மலை. 429.

அகைத்தழை - தொடுக்கப்பட்ட தழை. (வி. தொ). நற். 8.

அகைந்தன்ன - தழைத்தாலொத்த. பொரு. 159; அக. 245, 345;

கப்புவிட்டெரிந்தாற்போல. அக. கட, 106, 116, 277, 351; நற். 379.

அகைந்து. (செய்து. வி. எ). குறு. 366.
அகைப்ப - தழைப்ப. (செய. வி. எ). நற். 5; பறந்தோட. பதி. 23:12.
அகைபு - வருந்தி. (செய்பு. வி. எ). குறு. 366.
அகைமுல்லை - தழைத்த முல்லை. (வி. தொ). அக. 43.
அகைய - எரிய. (செய.வி.எ). அக. 293, 339; தழைக்கும்படி. மது. 92; தோன்ற. நற். 172.
அகை யெரி - சுடப்பட்டு எரியுந்தீ. (வி. தொ). கலி. 139.
அங்கண் - அழகிய இடம். மது. 384; அக. 136, 361.
அங்கண்...கிளை. புற. 373.

அங்கண் குறுமுயல். புற. 384.
அங்கண் பெண்ணை - அழகிய இடத்தினை யுடைய பனை. அக. 290.
அங்கண் வயல். நற். 210.
அங்கண் ... வலை. நற். 4.
அங்கண் ... வானம். பரி. 1: 41.
அங்கண் விசும்பு. அக. 208.
அங்கணாளன் - கண்ணோட்டம் உடையவன். கலி. 144.

அங்கணுடையன் - கண்ணோட்டம் உடையவன். கலி. 37.
அங்கலிழ் ஆகம். ஐங். 106.
அங்கலிழ் மேனி. ஐங். 174.
அங்கலுழ்...கண். அக. 295.
அங்கலுழ்மாமை - அழகொழுகும் மாமைநிறம். அக. 41. 96; ஐங். 357. குறு. 147.
அங்கலுழ்மேனி. குறு. 143.
அங்கவடு-அழகியகிளை.பதி. 23:1.
அங்கவுள் - அழகிய கதுப்பகம். புற. 212.
அங்காட்டு ... இடை - காட்டின் அகத்திடம். அக. 14.
அங்காட்டு ... விடர். மது. 307.
அங்காடி - கடை. (பெ). நற். 258; கடைவீதி. அக. 93; பரி. திர. 2:9.
அங்கால் கள்ளி - அழகிய தண்டினையுடைய கள்ளி. குறு. 16.
அங்கானம் - அழகிய சோலை. குறு. 245; ஐங். 250.
அங்கி - கார்த்திகை. (பெ). பரி. 11:7; நெருப்பு. பட்டி. 54.

அங்கு - அவ்விடத்து. குறி. 97; கலி. 145.

அங்குசம் - தோட்டி. (பெ). திரு. 110.

அங்குடி - அழகிய குடியிருப்பு. அக. 225, 321, 329, 367.

அங்குடிச்சீறூர். குறு. 41, 79; அக. 9, 287; புற. 324; நற். 343.

அங்குரும்பைக்...காய் - அழகிய இளைதாகிய பச்சைப்பாக்கு. மது. 683.

அங்குவட்டிடை - அழகிய குன்றினிடத்தில். நற். 331.

அங்குழும்பு - அழகியகுழி. மது. 241.

அங்குழை - அழகிய காதணி. பொரு. 144; அழகியதளிர். அக. 59, 104, 107, 331.

அங்கை - அழகியகை. பதி. 71: 15; உள்ளங்கை. திரு. 234; சிறு. 74; முல்லை. 95; கலி. கட; அக. 16, 94; புற. 380; நற். 22.

அங்கையில்

அங்கையில். பரி. 10: 76.

அங்கொழுமுகை - அழகிய கொழுவிய அரும்பு. குறு. 265.

அங்கோடு - அழகியகொம்பு. அக. 97.

அச்சம் - மது. 498, 652; குறி. 29; கலி. 110; குறு. 392; பதி. 22:2.

அச்சிரம்-பனி. (பெ). குறு. 68, 76, 82, 338; ஐங். 223; பரி. 18: 38.

அச்சு - அச்சம். (பெ). கலி. 75; அக. 281; பதி. 90:2; பரி. 3:33;

அச்சுமரம். புற. 90, 102.

அச்சுடைச்சாகாடு - அச்சினை உடையவண்டி. புற. 256.

அச்சுவர - அச்சம் உண்டாக. (செய. வி. எ). புற. 360.

அச்சுற-அச்சமுறும்படி. (செய.வி.எ).கலி.134.

அசா - வருத்தம். (பெ). அக. 47.

அசாஅ - தளர்வு. அக. 343;

வருத்தம். குறு. 388.
அசாஅம். அக. (பெ. எ). 170; நற். 83.
அசாஅ விடூஉம் - இளைப்பாறும். கலி. 132.
அசாஇனம் - தளர்ச்சியுற்ற கூட்டம். அக. 49.
அசாவா - தளராத. (ஈ. கெ. எ. பெ. எ). புற. 399;
வருந்தாத. நற். 363.
அசாவாது - வருந்தாமல். (வி. எ). குறு. 269.
அசாவிட. (செய. வி. எ). குறு. 338.
அசாவிட - நீங்க. அக. 162.
அசுணம் - அசுணம் என்னும் விலங்கு. (பெ). அக. 88; நற். 244, 304.
அசும்பின்...வள்ளை - சேற்றிலுள்ள வள்ளைக் கொடி. அக. 376.
அசும்பு - சேறு. (பெ). புற. 114;
நீர் அறுக்குழி. அக. 8.
அசும்பும் - இடையறுதொழுகும். பரி. 21:52.
அசும்புறுசெல்வம். பரி. 8:28.
அசைஇ - அசைந்து. (செய்து. வி. எ). நெடு. 185; கலி. 9, 111;

இருந்து. பெரு. 316;
இளைத்து. பெரு. 333; பட்டி. 259. மலை. 44;
இளைப்பாறி. பெரு. 44, 390; சிறு. 12; மலை. 158, 403; அக. 120; குறு. 345;
கூடிக்கிடக்க. (வி. எ. திரிபு). அக. 99;
சார்ந்து. (செய்து. வி. எ). கலி. 72;
தங்கி. அக. 20, 49, 63, 121, 165, 190, 199, 249, 289, 295, 398, 399; குறு. 338; புற. 67, 141; நற். 4, 21, 25, 76;

தளர்ந்து. குறு. 287; புற. 361;
போய். ஐங். 95;
வருந்தி. சிறு. 17;
வெய்துயிர்த்து. அக. 55.

அசைஇய-அசைந்துவருதலையுடைய. (பெ.எ). அக. 58;
இளைத்த. கலி. 11;
ஓய்ந்த. சிறு. 32;
களைப்படைந்த. நற். 81;
தங்கிய. அக. 190, 359, 379; குறு. 303;
பள்ளிகொண்ட. கலி 105;
மெலிந்த. ஐங். 174;

வருந்திய. புற. 97, 98.
அசைஇயது - கிடந்தது. திரு. 109.
அசை இயல் - கட்புலனாகி இயங்கும் சாயல். குறு. 214.
அசைஇயும் - உடுத்தும். (பெ.எ). அக. 188.
அசைஇயுள் - களைப்புற்று. நற். 106.
அசைகுழவி - பிணிக்கப்பெற்ற இளங்கன்று. (வி. தொ). அக. 54.
அசைத்த - கட்டின. (பெ.எ). முல்லை. 14; குறு. 294. அக. 100, 155, 301; பரி. 17:3; தங்குவித்த. பதி. 58:2.
அசைத்த கை - தட்டின கை. கலி. 68; வைத்த கை. கலி. 50.
அசைத்தல் செல்லாது - அசைக்க இயலாமல். அக. 391.
அசைத்து - ஆட்டி. (செய்து. வி. எ). பரி. 21:19;
கட்டி. அக. 351.
அசைத்தோன் - கட்டினேன். (வி. அ. பெ). புற. 283.'
அசைதல் - இருத்தல். (தொ. பெ). திரு. 176.
அசைதல் ஓம்பி-இளைப்பாறி. மலை. 256.

அசைந்த - தங்கிய. ஐங். 382.
அசைந்தனர்-தங்கினராகி. (மு. எ). அக. 345.
அசைந்து - தங்கி. (செய்து.வி. எ). அக. 329.
அசைநடை - அசைந்தியங்குநடை. குறு. 182; ஐங். 49, 258, 298, 299, 384; தளர்ந்த நடையையுடையவள். (ஆ. பெ). பதி. 16:13.
அசைநடைநாரை - அசைந்தநடையையுடைய நாரை. கலி. 128.
அசைநடை விறலியர். பதி. 51:21.
அசைநிலை-அசையும்நிலைமை. (வி. தொ).அக. 187. இட்டுவைத்ததன்மை. முல்லை. 38;
அசைநிழல் - அசைகின்ற நிழல். நற். 258.

அசைப்பார்
8
அஞ்சாய்
கூ ந்தல்

அசைப்பார் - கட்டுவார். பரி. 19:31.

அசைபு - அசைந்து. (செய்பு.வி.எ). அக. 106; தங்கி. பரி. 17:34.

அசைய. (செய. வி.எ). ஐங். 460; பரி. 21:62.

அசையல் - தளர்ந்தொழுகாதே! (விய. வி. மு). குறி. 180.

அசையா...இசை - கெடாதபுகழ். பதி. 82:15.

அசையாது - உறுதிகுன்றாது. பதி. 69:11.

அசையாநாற்றம் - விட்டுநீங்காதமணம். அக. 272.

அசைமியல் - அசைந்த இயல்பு. (வி. தொ). கலி. 101.

அசைமின் - இளைப்பாறுவீராயின். (செயின். வி. எ). பெரு. 336.

அசைமின - வருந்திநின்றன. (ப. வி. மு). நற். 279.

அசைமினம் - தங்கினமாகி. (மு. எ). அக. 287.

அசைமினள் - இளைப்பாறினளாய். (மு. எ). அக. 280.

அசைமினன் - மெல்லென. (மு. எ). அக. 102.

அசைமினிர் - இளைத்து. (மு. எ). மலை. 290; இளைப்பாறி. மலை. 433, 470.

அசைமினை - இளைத்தாய். (மு. வி. மு). கலி. 96.

அசையுடன் - செயலறவுடன். நற். 214.

அசையுநர்-தளர்ந்தனராகி.(மு. எ). அக. 277.
அசையும் - அசைகின்ற. (பெ .எ). பரி. 19: 25, 21: 62;
தங்கும். மலை. 67.
அசைவண்டு. (வி. தொ). அக. 40.
அசைவந்தாங்கு - அசைந்தாற்போல. முல்லை. 52.
அசைவர - துவட்சியொடு. நற். 20.
அசைவரல் வாடை - அசைந்துவரும் வாடைக் காற்று. அக. 96.
அசைவரும். பரி. 8: 27.
அசைவழி அசைஇ - தங்குமிடத்தேதங்கி. நற். 76.
அசைவளி. (வி. தொ). முல்லை. 52; குறு. 28, 195, 273; அக. 102, 162, 272, 298, 302, 340; ஐங். 320; நற். 74.
அசை...வளி.(வி. தொ). மது. 450; குறி. 140; கலி. 121, 126;
அசைவிட - அசைமிட. புற. 339;
இளைப்பாற. பரி. 6: 2;
இளைப்புத்தீரும்படி. மலை. 251;
தளர்ச்சி நீங்க. அக. 295.

அசைவிடூஉம் - இளைப்பாறும். கலி. 78.
அசைவில் கொள்கையர். பதி. 69: 11.
அசைவில் ...தாள் - தளர்வில்லாத தாள்கள். அக. 29, 191.
அசைவில் ...பறை - வருந்துதலில்லாத சிறகு. நற். 356.
அசைவிலர் - தப்பிலராய். (மு. எ). மது. 650.
அசைவிலுள்ளம் - தளராதமனம். அக. 339.
அசைவின்றி - இளைப்பின்றி. (வி. எ). பட்டி. 124.
அசைவின்று - தங்குதலின்றி. (வி. எ). அக. 255;
தளர்தலின்றி - அக. 199.
அசைவீட - தளர்ச்சிநீங்க. அக. 341.
அசைவு - தளர்ச்சி. (தொ. பெ). கலி. 110; அக. 110; புற. 148.
அசைவுடன் - தளர்ச்சியுடன். அக. 297.
அசைவுடைநெஞ்சம். அக. 273.
அசைவுநீக்கி - இளைப்பாறி. நற். 76.
அசைவுழி - இளைத்தவிடத்து. மலை. 403.
அசைவுழி அசைஇ - இளைத்த விடத்தே இளைப் பாறி. பெரு. 44.

அசோகம் - அசோகமரம். (பெ). கலி. 57.
அஞ்சல் - அஞ்சுதல். (தொ. பெ). திரு. 291; குறி. 131; கலி. 21, 53, 106, 132; குறு. 14, 300, 395;
அஞ்சாதே. (விய. வி. மு). அக. 396; நற். 43, 102; கலி. 115, 140.
அஞ்சல்ஓம்பு - அஞ்சுதலை ஒழிவாய். அக. 313.
அஞ்சலம் - அஞ்சுவமல்லேம். புற. 397.
அஞ்சலர் - அஞ்சுகின்றிலர். அக. 144.
அஞ்சலன். புற. 361.
அஞ்சலை-அஞ்சுகின்றிலை.குறு.300;பதி. 63:3.
அஞ்சனஉருவன். புற. 124.
அஞ்சனம் - மை. (பெ). முல்லை. 93; ஐங். 16.
அஞ்சா - அஞ்சாத. (ஈ. கெ. எ. பெ. எ). மது. 644; கலி. 113; நற். 104, 351; பதி. 21:27, 82: 2, 90: 5; பரி. 5:6.
அஞ்சி. (செய்யா. வி. எ). கலி. 143.
அஞ்சா அரவு. புற. 89.
அஞ்சாதி - அஞ்சாதேகொள். கலி. 84.
அஞ்சாது - அஞ்சாமல். (வி. எ). மலை. 403; கலி. 16, 34, 42; அக. 281; புற. 72; நற். 48. 76, 148, 386.
அஞ்சாமறவர். புற. 373.

அஞ்சாய். கலி. 38, 136; புற. 139; நற். 336.
அஞ்சாய் கூந்தல் - ஐம்பாலாய கூந்தல். ஐங். 383.



அஞ்சாயோ. ஐங். 66.
அஞ்சார் - அஞ்சாராய்க்கொள்பவர். கலி. 103; பதி. 72:1.
அஞ்சாவினைவர் - அஞ்சாத வினைசெய்பவர். கலி. 10.
அஞ்சான் - அஞ்சமாட்டான். (வி. மு). கலி. 10, 104; அக. 252;
அஞ்சானுகி. (மு. எ). நற். 287.
அஞ்சி - ஒருசிற்றரசன். (பெ). குறு. 91; அக. 115, 372; புற. 91, 310; நற். 381;
(வி.எ). மது. 201, 403; குறி. 137; பட்டி. 208; மலை. 193; கலி. 2, 10, 26, 39, 75, 88, 98; குறு. 177, 349, 373, 401; அக. 5, 7, 32, 34, 78, 142, 156, 160, 176,

அஞ்சினம் - அஞ்சினேம். புற. 229; நற். 368.
அஞ்சினர். (வி. அ. பெ). சிறு. 210; அக. 26.
அஞ்சினள். (மு. எ). அக. 86, 198.
அஞ்சினன். (வி. மு). குறு. 302.
அஞ்சினன் ஆதல். கலி. 65.
அஞ்சினென் - அஞ்சி. (மு. எ). நற். 53.
அஞ்சினை. அக. 21, 99, 273; ஐங். 346.
அஞ்சீர் - அழகியசீர். கலி. 140; பரி 15:63; அழகியதாள அறுதி. மது. 160.
அஞ்சு - அச்சம். (பெ). குறு. 112.
அஞ்சுடர் நெடுவேல். குறு. கட.
அஞ்சுதக - அஞ்சுமாறு. நற். 154.

2

அஞ்சுதகவு - அஞ்சத்தக்கதகுதி. புற. 353.
அஞ்சுதகவுடையன். அக. 318.
அஞ்சுதல். (தொ. பெ). குறு. 211.
அஞ்சுதி-அஞ்சுகின்றாய். கலி. 107. அக. 123.
அஞ்சுதும். குறு. 302; அக. 118; நற். 125, 359.
அஞ்சுபிடி - அஞ்சும் பெண்யானை. (வி. தொ). நற். 14.
அஞ்சுபு - நடுங்கி. (செய்பு. வி. எ). நற். 144.

அஞ்சும். கலி. 12, 103; குறு. 143, 153; அக. 68, 107; ஐங். 205; புற. 20, 361; நற். 73, 210; பதி. 57: 14.

அஞ்சுவது - அஞ்சுதல். கலி. 115; குறு. 80, 237; புற. 182.

அஞ்சுவது அஞ்சா. கலி. 42.

அஞ்சுவந்த - அஞ்சுதல் உண்டான. மது. 28.

அஞ்சுவந்தன்று - அச்சம்வந்தது. புற. 356.

அஞ்சுவம். (த. ப. வி. மு). அக. 72.

அஞ்சுவர். கலி. 52.

அஞ்சுவர - அச்சம் உண்டாக. திரு. 58; மது. 127, 140; குறி. 41; பட்டி. 257; அக. 43, 77, 264; புற. 224; நற். 83, 99, 319, 387.

அஞ்சுவரத் தகுந - அஞ்சத்தகுவன. புற. 41; அக. 63, 381.

அஞ்சுவரு கவலை - அஞ்சத்தக்க கவர்த்த வழி. அக. 115, 161; நற். 352.

அஞ்சுவரு கிடக்கைய. புற. 370, 373.

அஞ்சுவரு குராஅல் - அச்சத்தைத்தரும் கூகை. புற. 280.

அஞ்சுவரு...கை. அக. 93.

அஞ்சுவரு சுரம். அக. 375.

அஞ்சுவரு தலை - அச்சம்தோன்றுகின்ற இடம்.

நற். 298.
அஞ்சுவரு...திறல். திரு. 149; மலை. 81.
அஞ்சுவரு நெடுவேல். சிறு. 94.
அஞ்சுவரு நெறி. அக. 157, 258; நற். 33.
அஞ்சுவரு...நெறி. நற். 85, 333.
அஞ்சுவரு நோய். அக. 45.
அஞ்சுவரு பதுக்கை - அச்சந்தரும்கற்குவியல். அக. 215.
அஞ்சுவரு பேஎய் - அஞ்சத்தகும் பேய். அக. 142.
அஞ்சுவரு பேய்மகள். திரு. 51.
அஞ்சுவரு பொழுது - அச்சம் உண்டாகின்ற காலம். குறு. 261.
அஞ்சுவரும் இயவு - நடுக்கமுண்டாகும் வழி. நற். 383.



அஞ்சுவருமரபின் கடவுள். பதி. 79:17.
அஞ்சுவரு மரபு. புற. 211.

அஞ்சுவரு மூதூர். அக. 114, 115.
அஞ்சுவரு விடர். அக. 272.
அஞ்சுவல் - அஞ்சுவேன். கலி. 48; குறு. 217, 324; அக. 300, 396; ஐங். 54; புற. 83, 255; நற். 72, 88, 114, 229, 336, 397.
அஞ்சுவழி - அஞ்சுமிடம். நற். 76.
அஞ்சுவள். அக. 158.
அஞ்சுவாற்கு. பரி. 6:96.
அஞ்சுவான் - அஞ்சுகின்றவன். (வி. அ. பெ). கலி. 103.
அஞ்செஞ் சீறடி. அக. 389.
அஞ்செந் நா. அக. 142.
அஞ்செவ்வாய். குறு. 286.
அஞ்செவி - அகஞ்செவி. முல்லை. 89; அழகிய காது. குறு. 322.
அஞ்செறுவில். ஐங். 26.
அஞ்சேர்ப்பன் - அழகியசேர்ப்பினையுடையவன். கலி. 128.
அஞ்சேன். நற். 362, 397.
அஞ்சொற் பாண்மகள் - அழகிய சொற்களை யுடைய பாண்மகள். அக. 126.
அஞ்ஞான்று. கலி. 19, 108, 143.

அஞ்ஞை - அன்னை. அக. 15, 145.
அஞர் - கவற்சி. (பெ). கலி. 60;
துன்பம். அக. 62, 71, 202, 245; புற. 238, 247; நற். 130, 154, 193, 214, 248; குறு. 76, 103, 305, 354;
வருத்தம். பொரு. 88, 99; கலி. 44, 53, 100, 110, 120, 127, 143, 144; அக. 32; நற். 30, 100, 113.
அஞர் உறுவி - மயக்கமுற்றவள். நற். 106.
அட்ட - கொன்ற. (பெ.எ). மது. 295; அக. 8, 72, 111, 144, 145; புற. 23, 213, 302; பரி. 1: 58, 7: 49;
சமைத்த. சிறு. 175; பெரு. 100, 304, 472; குறு. 167; அக. 107, 394; புற. 215, 246, 300, 399; நற். 41;
வருத்திய. பதி. 11:2;
வென்ற. குறு. 34.
அட்ட களம். கலி. 104.
அட்ட களிறு. கலி. 91.
அட்ட குழிசி - அடப்பட்ட பானை. (வி. தொ). புற. 237.

அட்டது - கொன்றது. (வி. மு). புற. 77.
அட்ட...பிண்டம். புற. 372.

அட்டரக்கு - உருக்கிய அரக்கு. (பெயரெச்சத்து அகரம் தொக்கது). நற். 193.
அட்டவாயில் - ஒரு ஊர். (பெ). அக. 326.
அட்டவை - கொன்ற படையுடையாய். பரி. 21:66.
அட்டனன். (வி. மு). புற. 78.
அட்டாங்கு - கொன்றாற்போல. பொரு. 142.
அட்டான் - கொன்றான். (வி. மு). பரி. 15:45, 17: 21.
அட்டானன் - பொருது அழித்தும் அமையான். பதி. 47:1.
அட்டி - இட்டு. (செய்து. வி. எ). திரு. 28; மிகவிட்டு. பெரு. 195; பரி. 20:52; வார்த்து. நற். 175.
அட்டில் - அடுக்களை. (பெ). சிறு. 132; பட்டி. 43, 262; அக. 168; நற். 300.
அட்டிலோள்-அடிசிற்சாலையிடத்தள். நற்.120.
அட்டு - உண்டு. (செய்து. வி. எ). புற. 10; குற்றி. புற. 227;

கொன்று. மது. 186; கலி. 31, 101; குறு. 173, 231, 321; அக. 1, 45, 112, 261; புற. 40, 104, 125, 227, 310; நற். 112, 383; சமைத்து. அக. 316; புற. 113, 120, 328; வருத்தி. கலி. 103, 105.

அட்டுமலர் மார்பன் - அடுதலால் விரிந்த மார்பினையுடையவன். பதி. 20:21.

அட்டென - கொன்றதென்று. நற். 47.

அட - அடுகையினாலே. (செய.வி.எ). கலி. 60; வருத்த . பொரு. 31; கலி. 17, 44, 48, 53; அக. 252, 313, 344; ஐங். 313, 393; புற. 159, 399; நற். 64, 93, 103, 218, 303.

அடக்கம் - அடங்கியிருத்தல். கலி. 32, 138.

அடக்கல். (தொ. பெ). புற. 93.

அடக்கவும். ஐங். 68; அக. 124.

அடக்கி - (செய்து. வி. எ). மது. 496; இட்டுப்பொதிந்து. சிறு. 58; உள்ளடக்கி. கலி. 142; புற. 1, 91.

அடக்கிய - அடக்கியிருக்கின்ற. (பெ. எ). திரு. 186; பெரு. 395; நற். கட; அடிப்படுத்திய. பதி. 45:16; பெரு. 396; உடைய. மலை. 418;

வாரியெடுத்துக்கொண்ட. பெரு. 94.
அடக்கும் - வணக்கும். (பெ. எ). புற. 200.
அடக்குவம் - அடக்கியிருப்பேம். அக. 328.
அடகு - இலை. (பெ). புற. 62, 140, 159, 197, 318.
அடகும் - இலைக்கறியும். மது. 531.



அடங்க - அடங்கிக் கிடக்க. (செய. வி. எ). மது. 621;
அமைதியுற. அக. 332;
இல்லையாம்படி. திரு. 59;
சாய்ந்தொழிய. அக. 36; பதி. 40: 8;
நெருங்க. கலி. 85;
முழுவதும். அக. 223; புற. 40, 76.
அடங்கக் கேள் - சுருங்கக் கேள். கலி. 63.
அடங்கக் கொண்டு - வலி அடங்கத் தழுவி. கலி. 103.

அடங்கருந்தோற்றம் - மனவேட்கை அடங்கின அரிய விளக்கம். கலி. 138.
அடங்கல் - மீளுதல், (தொ. பெ). கலி. 122; புற. 354.
அடங்கல - அடங்கமாட்டா. (ப.வி.மு). புற. 31.
அடங்கலன். ஐங். 68.
அடங்கலின் - அடங்கிப்போகையினால். கலி. 13.
அடங்கற் காலை - ஊழிமுடிவாகிய காலம். கலி. 120.
அடங்காத்தானை - ஓர் எண்ணின்கண்ணே அடங்காத படை. பெரு. 418; புற. 71.
அடங்காதார். கலி. 2.
அடங்காது. (வி. எ). புற. 207.
அடங்காதோர் - பகைவர். புற. 35.
அடங்காமன்னர். புற. 200.
அடங்கார் - பகைவர். பதி. 39: 7.
அடங்காள். அக. 126.
அடங்கான் - அடங்கானாய். (மு.எ). புற. 283.
அடங்கி - அடங்கிக்கிடந்து. (செய்து. வி. எ). கலி. 105;
அமைந்து. அக. 312; நற். 303.
அடங்கிய - அமைந்த. (பெ. எ). புற. 26, 191, 249, 367;

தங்கிய. அக. 114; புற. 337.

அடங்கியகற்பின்...அரிவை. குறு. 338.

அடங்கிய கொள்கை - புலனடக்கமாகிய ஒழுக்கம். பதி. 15:29, 57:11, 90:48, பதிக. 6:12.

அடங்கிய சாயல் - அமைதியான மென்மை. பதி. 16:10.

அடங்கிய...செம்மால்!. பதி. 37:5.

அடங்கிய நெஞ்சம். பதி. 89:14.

அடங்கிய புடையல் - அடக்கமாகத் தொடுத்த பனைமாலை. பதி. 31:31.

அடங்கினர் - துயின்றனர். (வி. மு). குறு. 6.

அடங்கினோன் - தவிர்ந்தேன். கலி. 94.

அடங்கு அகலம் - அடங்குதற்குக்காரணமான மார்பு. அக. 175.

அடங்கு அறிஞர். மது. 481.

அடங்கு கயிறு - அடங்கிச் செல்வதற்குரிய கடிவாளக்கயிறு. அக. 224.

அடங்கு தெரு. சிறு. 201.

அடங்கு புரிநரம்பு. சிறு. 227.

அடங்கு...புரி நரம்பு. சிறு. 34.
அடங்கு மயிர் - இல்லையானமயிர். மலை. 32.
அடர் - தகடு. (பெ). மலை. 4;கலி. 22, 51, 140; அக. 9, 19; ஐங். 430; புற. 29; பரி. 12: 12.
அடர் ஐம்பால் - அடர்ந்தகூந்தல். (வி. தொ). அக. 181.
அடர் தாமரை - தகடாகச் செய்த தாமரை. புற. 29.
அடர்ந்த - கம்பியாகச்செய்த. (பெ.எ). புற. 29.
அடர்ந்தன்ன - நெருங்கி இருந்தாற்போல. அக. 280.
அடர்ந்து. (செய்து. வி. எ). பரி. 18: 24.
அடர் புகர் - அடர்ந்தபுள்ளி. (வி.தொ). புற. 6.
அடர் பொன் - தகடாகியபொன். கலி. 22, 51, 140.
அடர்...மின்னு. பரி. 21: 54.
அடரு நோய். கலி. 58.
அடல் - கொல்லுதல். (தொ. பெ). புற. 52, 76; வென்றி. பரி. 11: 48.
அடல்நசை - சோறுக்கும்விருப்பம். புற. 393.
அடல்வெம் குரிசில். புற. 377.
அடல்வெம் நாஞ்சில் - கொலையை விரும்பும் கலப்பை. புற. 56.

அடலருந் துப்பு. புற. 335.
அடலேறு - கொல்லுகின்ற ஏறு. கலி. 102.
அடற்கொண்டி - அடுதலால்கொள்ளும் பொருளின் மிகுதி. புற. 382.
அடன்மா - வெற்றியினை உடைய குதிரை. கலி. 141.
அடன்முனை - வலிபொருந்திய போர்முனை. அக. 45.
அடாஅ - அடக்கி. புற. 212.
அடாஅ அடுபுகை - ஊர்சுடுபுகை. பதி. 20:21.
அடாஅ நறவு - மடாநறவு. கலி. 147.
அடாஅர் - விலங்குகளை அகப்படுத்தும் பொறி. (பெ). நற். 119.
அடார். (பெ). புற. 19.
அடி - அடிச்சுவடு. (பெ). அக. 137, 155; நற். 156, 241;
அடித்தல். (மு. தொ. பெ). கலி. 81;
அடிப்பகுதி. குறு. 89; நற். 115, 120, 289, 305;

## அடுக்கிய

அடிப்பாடு. குறி. 258;
அடியீடு. அக. 105;
காம்பு. (பெ). நற். 120;
கால். (சி. பெ). திரு. 279, 313; பொரு. 42; சிறு. 18, 32, 123, 197; பெரு. 69, 169; மது. 162, 436; நெடு. 122, 151; குறி. 127, 133; பட்டி. 146; மலை. 43, 241; கலி. 11, 13, 20, 21, 30, 37, 41, 43, 54, 63, 71, 73, 85, 90, 94, 108, 128, 143, 147; குறு. 7, 138, 148, 180, 207, 262, 278; அக. 12, 17, 55, 61, 83, 89, 117, 125, 142, 144, 153, 191, 211, 253, 257, 267, 276, 309, 323, 343, 376, 389; புற. 7, 10, 15, 22, 35, 39, 40, 61, 72, 73, 125, 135, 139, 198, 233, 234, 323, 369, 370, 390; நற். கட. 51, 76, 221, 252, 256, 279, 297, 324, 342; பதி. 28:3, 31:9, 52:19, 57:5; பரி. 2:72, 3:2, 19, 8:62, 68, 9:37, 13:51, 61, 21:18, திர. 1:6, 81.

அடிசில் - உணவு. (பெ). சிறு. 241; பெரு. 476; குறி. 204; அக. 394; புற. 10, 127, 160, 188, 250, 390; பதி. 45: 13; பரி. 10:105.

அடிசேர்தல் - வணக்கம்செய்தல். கலி. 89.

அடிசேர்ந்து. (செய்து. வி. எ). பரி. 8:79.

அடிதாழ் கலிங்கம் - அடியிலேதாழ்ந்த துகில். கலி. 92.

அடிதொடர்ந்து - அடியோடேதொடர்புபட்டு. சிறு. 18.

அடிதொடர் குன்று. பரி. 8:70.

அடிநிலை - அடி ஊன்றியிட்ட நிலை. மலை. 222.

அடிப்பட - முற்ற. (செய. வி. எ). அக. 209.

அடிப்படர - அடிப்பட்டுநடக்க. (செய. வி. எ). மது. 21.

அடிப்படுத்ததை - திருத்தியதொழில். ('ஐ'காரம், சாரியை). பரி. 4:23.

அடிப்படுத்தலின். பதி. 81:15.

அடிப்பின் - தட்டினவிடத்து. புற. 128.

அடிபட - அடிகள்பதிய. (செய. வி. எ). அக. 379.

அடிபடு மண்டிலம் - குரங் (குதிரைக்குளம்பு) கள் அழுந்தின வட்டம். மது. 390.

அடிபுணர்...மருப்பு. புற. 285.

அடிபுதை அரணம் - அடியை மறைக்கும் செருப்பு. பெரு. 69.

அடிபுதை தொடுதோல் - அடியைமறைத்துள்ள செருப்பு. அக. 101.

அடிபுனை...கழல். புற. 83.

அடிபொறிப்ப - அடிகள் சுவடுசெய்ய. (செய. வி. எ). குறு. 207.

அடிமேல் அடிமேல் ஒதுங்கி. பரி. 12:90.

அடிய - அடிகளையுடைய. பட்டி. 231; கலி. 13.

அடியமைபகழி. அக. 161.

அடியர் - அடியினை உடையார். (கு. வி. மு). மது. 636; பட்டி. 265; கலி. 88; அக. 129.

அடியன் - காலினையுடையவன். அக. 113.

அடியார்ந்த - அடியில்நிறைந்த. கலி. 86.

அடியினை - அடியையுடையை. (மு. வி. மு). பரி. 3:20.

அடியுறை - அடிக்கீழ். புற. 67; பரி. 1:62;
அடியில்வாழ்வேன். புற. 198;
வழிபட்டுறைதல். கலி. 140; பரி. 9:84, 15:65, 17:7, 18:54, 21:16, 68.

அடியுறை மகளிர். பரி. 14:5.

அடியுறையார். பரி. திர. 1:45.

அடியொதுங்கி - இட்ட அடி வாங்கி. மது. 37.

அடியொல்கி - வணங்கி. கலி. 92.

அடியோர்மைந்தர். பரி. 8:43.

அடிவழி - அடிச்சுவட்டின்கண். குறு. 262;
அடிச்சுவடு. அக. 388; புற. 392;
அடிப்பாட்டின்வழி. மது. 192.
அடுக்க - அடுத்து. பரி. 13:62.
அடுக்கத்த - மலையிடத்தன. (வி. மு). கலி. 48;
நற். 359.
அடுக்கத்தது. ஐங். 291.
அடுக்கத்தானும் - மலையிடத்தும். நற். 328.
அடுக்கத்து - மலையிடத்து. திரு. 42; பெரு. 257; குறு. 218, 376, 385; அக. 3, 52, 62; ஐங். 220, 260, 261, 262, 267, 289.
அடுக்கம் - பக்கமலை. (பெ). மலை. 141, 239, 289, 359; கலி. 44, 45, 49, 59; குறு. 69, 90, 179, 260, 288; அக. 8, 47, 82, 92, 116, 143, 148, 152, 153, 238, 252, 288, 302, 312, 328, 332, 347, 359, 388; ஐங். 274; புற. 2, 151, 200, 202, 374; நற். 7, 28, 34, 112, 116, 122, 151, 205, 233, 255, 259, 316, 334, 393, 399; பதி. 55: 18; பரி. 14:6.
அடுக்கல் - அடுக்குதல். (தொ. பெ). பரி. 3:44;
பக்கமலை. (பெ). மலை. 19; கலி. 40; அக. 348; ஐங். 296, 298; நற். 22.
அடுக்கிய - அடுக்கப்பட்ட. (பெ. எ). புற. 618, 62, 202;
சொரிந்த. பெரு. 246;

பெருக்கிய. திரு. 155.

அடுக்கியபொழுது
13
அடுஉ

அடுக்கியபொழுது. பதி. 68:6.
அடுக்கினை - அடுக்கிக் கூறினை. கலி. 122.
அடு கலம் - சமைக்கின்ற கலம். (வி. தொ). புற. 32.
அடு கள். (வி. தொ). பெரு. 142; புற. 329.
அடு களம் - போரடுகளம். அக. 99; புற. 26, 58, 93, 230; நற். 395; பதி. 8:7.
அடு களிறு - கைகடந்த களிறு. குறி. 150; புற. 69.
அடு குழிசி - ஆக்குகின்ற பானை. பெரு. 366.
அடுகென - வெல்க என்று. பரி. 8:108.
அடு கொற்றம். (வி. தொ). திரு. 156.
அடுங்கரை - மோதி இடிகின்றகரை. குறி. 176.
அடுத்த - அடக்கிய. (பெ. எ). புற. 30.
அடுத்தடுத்து. கலி. 81; பரி. 16:43.
அடுத்தனம் - சார்ந்து. (மு. எ). அக. 280.

அடுத்து - சேர்த்து. புற. 290;
பலகாலும். கலி. 71; அக. 195.
அடுதல் - கொல்லுதல். (தொ. பெ). புற. 39, 76, 78.
அடு தானை - அடுதலில் வல்லதானை. (வி.தொ). அக. 226; ஐங். 482; புற. 8, 110, 233; பதி. 11:16, 23:10, 43:11; பரி. 13:30.
அடு திகிரி - அழிக்கின்ற ஆழி. புற. 99.
அடு திரு - கொல்லும் வீரச்செல்வம். புற. 71.
அடு திறல் - கொல்லுகின்ற வலி. மது. 130.
அடு தீ. புற. 70.
அடுதொறும் - போரிடுந்தோறும். அக. 106.
அடு தோள் - போரிடுந்தோள். புற. 83.
அடுநர் - உழத்தியர். (பெ). நற். 60.
அடுநரு - சமைத்தகள். (வி. தொ). பரி. 21:20, திர. 2:58.
அடுநன் - கொல்லுமவன். (வி.அ.பெ). புற. 36.
அடுநிலை - கொன்றதன்மை (வி.தொ), புற. 80.
அடுநெய் - அடிசிலில்பெய்தநெய். பதி. 21:13.
அடுநை - கொல்வாய். (மு. வி. மு). புற. 36.
அடுப்பறியா - அடுத்தில்லாத. பதி. 63:19.
அடுப்பு - சமைத்தல். (தொ. பெ). பதி. 18:6; (பெ). அக. 119, 137, 141, 159, 393;

புற. 26, 372.
அடு பால் - கொதிக்கும் பால். (வி. தொ). நற். 175.
அடு பிணம் - கொலையுண்ட பிணம். நற். 329.
அடு புகழ் - பகைவெல்லுதலால் உண்டாகும் புகழ். அக. 214, 312.
அடு புகை - ஊர் சுடுபுகை. (வி. தொ). பதி. 20:21.
அடு புலி. (வி.தொ). மது. 298; அக. 75, 118.
அடு புனல். (வி. தொ). பரி. 6:32.
அடு பொருந!. (வி. தொ). புற. 17, 22.
அடு போர். (வி. தொ). மது. 207; குறு. 198; அக. 135, 335, 373; புற. 18, 42, 67, 129, 146, 153; நற். 39; பதி. 32:9, 42:8, 55:2.
அடுபோர் அண்ணல். பரி. 13:15.
அடுபோர்ச் செழியன். அக. 149.
அடுபோர்ச் சோழர். அக. 93, 96.
அடுபோர் மிஞிலி. அக. 181.
அடுபோர் வேளிர். அக. 206.
அடுபோராள!. பரி. 9:70.
அடும்பங்கொடி. கலி. 132.
அடும்பமர் எக்கர்-அடும்பங்கொடிபொருந்திய மணல்மேடு. அக. 320.

அடும்பமல்...கரை. பதி. 51:7.
அடும்பின் அலர் - அடும்ப மலர். கலி. 144.
அடும்பின்...அலரி - அடும்ப மலர். நற். 145.
அடும்பின்...கொடி - அடப்பங்கொடி. அக. 80.
அடும்பின் பூ. குறு. 243.
அடும்பின் மலர். பட்டி. 65.
அடும்பின்...மலர். குறு. 401.
அடும்பு - அடும்பங்கொடி. (பெ). பொரு. 195; குறு. 248, 349; அக. 160, 330; ஐங். 101; நற். 272; பதி. 30:6;
அடும்பம்பூ. குறி. 87; கலி. 127.
அடும்பு கொடி. நற். 338.
அடும்பு மலர். நற். 349.
அடு மகள் - சோறாக்கும் பெண். (வி. தொ). புற. 399.
அடு மரல் - அடுத்த மரல்செடி. (வி. தொ). நற். 278.
அடு மார்பு. (வி. தொ). அக. 386.
அடு மான் - பகையினைக்கொல்லுகின்ற யானை. புற. 213.
அடுமின்-சமையுங்கள். (விய.வி.மு). பதி. 18:1.
அடு முரண் - அடும் மாறுபாடு. அக. 307; புற. 350.
அடு முன்பு - போர் செய்யும் வலிமை. கலி. 2;

அக. 172.
அடுமை - சமைத்தல். (தொ. பெ). பதி. 21:13.
அடு...வாள் - கொல்லும் வாள். மது. 773.
அடுவி - அடுத்தவள். அக. 136.
அடு விறற் களம். (வி. தொ). திரு. 38.
அடு விறற்கொடி. (வி. தொ). திரு. 55.
அடூஉ - அலைத்து. (செய்து. வி. எ). அக. 322.



அடூஉநின்ற - நலிகின்ற. (பெ. எ). அக. 125.
அடூஉநின்ற யாக்கை - அடப்படும் உடம்பு. பதி. 13:11.
அடூஉநின்று - கூடி நின்று. (செய்து. வி. எ). அக. 378.
அடூஉம் - காய்ச்சும். (பெ. எ). பெரு. 261;
கொல்லும். நற். 36; பதி. 75:1;
போர்செய்யும். கலி. 27;
மாறும். புற. 41.
அடை - அடுத்தல். கலி. 115;

இலை. (பெ). அக. 36, 56, 70, 96, 106, 176, 256, 337, 400; ஐங். 225; புற. 103, 209, 266; நற். 34, 47, 138, 164, 230, 287, 310, 391; பதி. 24:20, 30:3; பரி. 13:50; குறு. 9, 246, 352;
மருதநில ஊர். (பெ). புற. 362;
மூளை. (பெ). பெரு. 278.

அடைஇய - துயின்ற. (பெ. எ). பட்டி. 115;
பொருந்திய. அக. 360.

அடைகரை - நீண்டகரை. சிறு. 68; குறு. 175, 212, 236, 303, 316; அக. 10, 30, 34, 60, 80, 96, 97, 130, 177, 216, 280; ஐங். 13, 21, 115, 193; புற. 342, 366, நற். 11, 27, 35, 118, 243, 385;
நெருங்கியகரை. (வி. தொ). பதி. 23:20, 30:5. 51:7, 88:41.

அடைகரை நெடுங்கயம் - அடைந்த கரையை யுடைய நெடுங்குளம். குறு. 171.

அடைச்சி - உடுத்து. (செய்து. வி. எ). மது. 588; குறு. 80; அக. 188, 261;
கொய்து. நற். 337;
சூடி. நற். 204;
செருகி. பதி. 27:2;
சேர்த்து. புற. 370.

அடைச்சிய - செறித்த. (பெ. எ). நற். 337; நட்ட. அக. 41, 217, 308, 358.

அடைச்சிய கோதை - கூந்தலில் அடைவித்த கோதை. கலி. 51.

அடைத்த. (பெ). புற. 44, 151; பரி. 6:82.

அடைத்தர - நினைந்த அளவில். பரி. 2:69.

அடைத்து. (செய்து. வி. எ). சிறு. 138; மது. 622.

அடைதர - தோன்றுகையினலே. (செய.வி.எ). குறி. 184.

அடைதருந்தோறும் - வரும்பொழுதெல்லாம். நற். 165.

அடைதரும் - அலையும். அக. 279.

அடைதல். (தொ. பெ). பெரு. 290.

அடைதலின் - முயங்குதலின். (செயின். வி. எ). அக. 58.

அடைந்த - சேர்ந்த. (பெ. எ). பட்டி. 82; புற. 97; பரி. 10:13;

மறைந்த. நற். 33.

அடைந்தக் கண்ணும் - சேர்ந்த இடத்தும். பரி. 6:84.

அடைந்ததற்கு - நிகழ்ந்ததற்கு. நற். 372.

அடைந்தன்று. நற். 218.
அடைந்தன்ன - செறிந்தாற்போல. நற். 24.
அடைந்தலைத்து. பரி. 19:27.
அடைந்திசினோர் - அடைந்தவர். குறு. 268.
அடைந்திருந்த - சார்ந்திருந்த. (பெ. எ). அக. 103, 171, 234.
அடைந்து - சார்ந்து. (செய்து. வி. எ). அக. 84, 265;
சேர்ந்து. மலை. 162.
அடைந்தென. பரி. 7:32.
அடைநீர் - முகந்த நீர். அக. 275.
அடைப்ப. (செய. வி. எ). குறு. 118; புற. 98.
அடைப்ப வரும்-இடையிட்டுக்கொண்டுவரும். கலி. 109.
அடைபு - அடைந்து. (செய்பு. வி. எ). கலி. 148; நற். 117.
அடைபு அதிர - எதிரொலித்துமுழங்க. (செய. வி. எ). பதி. 30:32.
அடைமருங்கில் - சார்ந்தபக்கத்தில். அக. 399.
அடைமல்கு குளவி - இலை தழைத்த காட்டு மல்லிகை. புற. 90.
அடைமுதல் - புகுமிடம். அக. 75, 389.

அடைய - இலைகளையுடைய. நற். 23, 27;
ஒடுங்கும்படி. (செய. வி. எ). குறி. 186;
சேர. (செய. வி. எ). ஐங். 39, 418; நற். 52;
பதி. 76:3; பரி. 11:12, 19:27; அக. 26. 218;
தங்க. நற். 69;
வளர. அக. 274, 299, 367.

அடையடுப்பறியா...ஆம்பல் - இலையை அடுத்தில்லாத ஆம்பல் என்னும் எண்ணுப்பெயர். பதி. 63:19.

அடைய முயங்கி - முழுவதும் தழுவி. அக. 150; நற். 182.

அடையல் - ஒருவகைச் செருப்பு. (பெ). பரி. 21:7.

அடையா. (ஈ. கெ. எ. பெ. எ). பெரு. 206; புற. 206, 261.

அடையாது

அடையாது - சாராமல். (வி. எ). நற். 313.
அடையாவாயில் - அடைக்கப்படாத கோபுர வாயில். சிறு. 206.
அடையூ - அடைத்து. (செய்யூ. வி. எ). பரி. 81:4.
அண்கணாளன் - (கண் அண் ஆளன்) முன்னே வந்துறும் தலைவன். அக. 32.
அண்டர் - இடையர். (பெ). குறு. 117, 210; அக. 59; பரி. 88:9.
அண்டிரன் - ஆய் அண்டிரன் என்னும் குறுநில மன்னன். ஆய் எனவும், ஆய்அண்டிரன் எனவும் வழங்கப்படுவான். கடையெழுவள்ளல்களில் ஒருவன். (பெ). புற. 131, 241; நற். 237.
அண்ணணித்து - மிகவும் அணித்து. கலி.108.
அண்ணல் - தலைமை. குறி. 54, 171; கலி. 9; குறு. 260, 338, 344, 363; அக. 23, 34, 61, 64; புற. 42, 55, 67, 93, 95, 115, 116, 126, 129, 130, 158, 198, 201-203, 205, 249, 287, 288, 311, 326, 337,

